# யாகமும் வைதிகமதமும்.

"ஆர்யதர்ம" த்தினின்று தொகுக்கப்பெற்றது.

பிரசுரகர்த்தர்,

S. சுப்ரமண்ய அய்யர், B. A., B. L.,

அட்வகேட் தேவகோட்டை.



1935

செட்டி நாடு பிரஸ், காரைக்குடி.

வைஷ்ணவ பிராமண்

# யாகமும் வைதிக மதமும்.

## அஹிம்ஸாவாதிகளின் துர்வாதத்திற்குப் பதில்.

நமது பாரத தேசத்தில் வைதிக மத விருத்தமான நாஸ்திக வாதமதிகமாகி வருவதால் அஹிம்ஸா வாதிகளென்ற வேஷம் பூண்ட சிலர் யாகங்களைப் பற்றித் தாறுமாறாகக் கண்டனம்செய்து வருகிறார்கள். அவர்களுடைய நாஸ்திக வாதங்களுக்குத் தகுந்த பதில் கூறி ஒரு பண்டிதரால் ஏற்கெனவே வெளியிடப்பட்டிருக்கிற ஒரு புஸ்தகத்திலிருந்து கீழ்க்கண்ட விஷயத்தை இங்கு பிரசுரிக்கிறோம். துர்வாதிகளும் ஆஸ்திகர்களும் இதை நன்கு ஊன்றிப் படித்து வைதிக மதத்தின் உண்மையை அறியவேண்டுகிறோம்.

தர்மங்களுள் மிகவும் உத்தமமாகிய அஹிம்ஸா தர்மத்தைப் பற்றி வாயளவில் மட்டும் பேசிப் பல விபரீதக் கொள்கைகள் வெளி வருமிக்காலத்தில் ஹிம்சை அஹிம்ஸை ஆகிய இரண்டு விஷயத்திலும் வைதிக மதம் போதிக்கும் தத்வம் என்ன வென்பதை இங்கு சிறிது கவனிப்பது உசிதமாயிருக்கும். கீதையில் பலவிடங்களிலும் அஹிம்ஸா தர்மமானது மிகவும் தீவ்ரமாக அனுஷ்டிக்கத்தக்கதென்றும், அதைக் கைவிடுவது பாபமென்றும், பலமாக வற்புறுத்தப் பட்டிருக்கிறது. அஹிம்ஸா தர்மத்தைப்பற்றி நமது சுருதி ஸ்மிருதி கீதை முதலியவைகள் விதித்திருக்கும் கண்டிப்பான கட்டளைகளைப் போல் வேறு எந்த மதத்திலும் காணமுடியாது. சுருங்கச் சொன்னால் இந்த தர்மத்தை உலகத்திற்கு உபதேசித்த கௌரவம் நம் மதம் ஒன்றுக்கே உரித்தானதாயிருக்கு மென்பதை ஒருவரும் ஆக்ஷேபிக்க முடியாது.

### அவச்ய ஹிம்ஸை

இப்படி அஹிம்ஸையை வற்புறுத்திய மதமானது அஹிம்ஸைக்கும் ஓர் வரையறை யுண்டென்பதைக் காட்டி யுத்தாதிகளாகிய அவச்ய ஹிம்ஸையை அது அநுமதித்திருப்பதையும் நாம் கவனிக்கத் தவறக்கூடாது. கீதையானது மிகக் குரூரமான ஹிம்ஸையாகிற யுத்தத்தைச் செய்யும்படி அர்ஜுனனைத் தூண்டுகிறது. கீதை

விட்டதாக நினைத்து யாவரும் திருப்தியடைகிறார்கள். யுத்த ஹிம்ஸையைப் பற்றி இவ்வாறு உலகந் தோன்றிய நாள் முதல் இன்றுவரையில் எந்த தேசத்திலும் எந்த மதத்திலும் ஒரேமாதிரியான கொள்கை இருந்துவருவது பிரத்யக்ஷமான விஷயம். யுத்த ஹிம்ஸையை அதர்மமென்று பழித்த மதம் ஒன்று கூட உலகில் கிடையாதென்பது நிச்சயமே. ஹிம்ஸையை அடியோடு விலக்கிவிட்டதாகப் பெருமை கொள்ளும் பௌத்தாதிகள் கூட யுத்த ஹிம்ஸையை அதர்மமாக நினைப்பதாகத் தெரியவில்லை. இந்தியாவிலும் மற்றவிடங்களிலும் ராஜ்யம் நடத்திய பௌத்தாதி அரசர்கள் யுத்த ஹிம்ஸை அதர்மமென்று சொல்லி அதை கைவிட்டதாக சரித்திரங்களால் தெரியவில்லை. நியாய ஸ்தலங்களில் மரண தண்டனை பெற்றவனைப் பௌத்தர்கள் ஜீவகாருண்யத்தை முன்னிட்டுக் கொலை செய்யாமல் விட்டுவிடுவதாகவும் தெரியவில்லை.

நாகரிகம் முற்றி விட்டதாகக் கருதப்படும் இவ்விருபதாவது நூற்றாண்டில் கூட இந்த யுத்தக் கொலையை ஆதரிக்காத தேசமும் மதமும் இருப்பதாகத் தெரியவில்லையே; நமக்கு நாகரீகத்தைக் கற்றுக்கொடுக்க வந்தவர்களென்று நம்மவர்களாலேயே ஸ்துதிக்கப்படுகிற மேற்றிசையார் இந்த யுத்த ஹிம்ஸையில் விசேஷ க்யாதி பெற்று விளங்கி வருவதை நாம் பார்த்து வரவில்லையா? யுத்தத்தில் எதிரிகளின் பிராணனைத் தனித்தனியாகவும் கூட்டம் கூட்டமாகவும் வாங்குவதற்கு புதிது புதிதாக எவ்வளவு உபாயங்கள் தினந்தோறும் கண்டுபிடிக்கப்படுகின்றன? ஆகாச விமான மூலமாயும், ஜலத்தின் கீழ் மறைந்தும், விஷப் புகைகளைக் கொண்டும் பிறரைக்கொலை செய்வதற்கு எவ்வளவு ஆராய்ச்சிகள் செய்யப்படுகின்றன. இந்த யுத்தக் கொலையை கற்றுக் கொடுப்பதற்காக எவ்வளவு பாடசாலைகள்? எவ்வளவு செலவு இந்த கோரமான கொலைத் தொழிலை கற்க விரும்பி நம்மவர் போடும் போட்டி தான் எவ்வளவு! இப்படி யுத்தக் கொலையானது வெகுஸஹஜமாக இருந்து வருகையில்வைதிக ஹிம்ஸையைப் பற்றி மட்டும் அஹிம்ஸா வாதிகள் குறை கூறுவது ஏனோ?

வாதி என்ன'.

ஸாதாரண காலத்தில் ஒருவன் ஒருவனைக் கொன்றால் குற்றவாளியென்று கருதி அவனுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டுவிடுகிறது. ஆனால் யுத்தத்தில் கொன்றால் அது புனிதமாகக் கருதப்படுவதுடன் கொன்றவனுக்கு கௌரவாதிகளும் செய்யப்படுகின்றன.

ஸாதாரணக் கொலைக்கும் யுத்தக் கொலைக்கும் என்ன வாசி? இரண்டிற்கும் ஏதாவது வித்யாஸம் கண்ணுக்குப் புலப்படுகிறதா? ஒன்றுமில்லையே! இரண்டிலும் கொலை செய்யப்பட்டவன் அநியாயமாக தனது பிராணனை இழப்பது ஸமமாகவே இருக்கிறது. ஆகவே ஒன்றை அதர்மமென்று நினைத்துத் தண்டிப்பதற்கும், மற்றொன்றைத் தர்மமென்றுசொல்லி கௌரவிப்பதற்கும் சாஸ்திரத்தைத்தவிர எந்த மதத்தினருக்கும் வேறு கதி கிடையாது. ஆகையால் தான் இக்காலத்திலும் வைதிக ஹிந்துக்கள், பௌத்தர், மஹம்மதியர், ஐரோப்பியர் முதலிய ஸகல ஜாதியினரும் யுத்தக் கொலையைத் தர்மமாகவும் இங்கு இறப்பவர்கள் வீர ஸ்வர்க்கம் போவதாகவும் தீவ்ரமாக, நம்புகிறார்கள். உண்மையில் இந்த விஷயத்தில் எந்த மதத்தினருக்கும் வேறு சமாதானமே கிடையாது.

இவ்வாறு யுத்த ஹிம்ஸையைப் பற்றி உலகம் முழுவதும் நிச்சயமான நம்பிக்கை இருந்துவருவதால் அஹிம்ஸா வாதிகள் ஒதுங்கி நிற்பதற்கு ஒரு ஊசிமுனை இடங்கூட இப்பூவுலகில் கிடைக்காதென்பது நிச்சயம் யுத்த ஹிம்ஸையை அடியோடு நிறுத்திவிடலாமென்று நினைப்பதும் கனவு மாத்திரமே. பலிஷ்டனால் துர்ப்பலனுக்கு துன்பம் நேரிடும்போது ஸத்யம் மறைந்து அஸத்யம் தலைதூக்கும்போது உலக மர்யாதையைக் காக்க யுத்தமொன்று தான் சக்திவாய்ந்த ஸாதனமாயிருக்கும். ஆகவே யுத்த ஹிம்ஸையானது இன்றியமையாததாக விருக்கிறபடியால் எல்லா மதமும் இதைத் தர்மம் என்றே அங்கீகரிக்க நேரிட்டது. ஆகவே அஹிம்ஸா வாதிகளுடைய வாதம் இவ்விஷயத்தில் நிலைத்து நிற்கமுடியாததே.

## அஹிம்ஸைக்கு வரையில்லையா?

இனி அஹிம்ஸா வாதிகள் எவ்வித வரையில்லாமலும் விலக்கு விதியில்லாமலும் எவ்விஷயத்திலும் ஒரே மாதிரியாக அஹிம்ஸைக் கொள்கையை அனுஷ்டிக்கிறார்களா? அல்லது அனுஷ்டிக்க முடியுமா என்பதையும் உலகானுபவத்தைக் கொண்டு சிறிது ஆராய்வது ஆவச்யகமாகும்.

இப்போது உலகானுபவம் எப்படி யிருக்கின்றதென்றால் மனிதன் ஒருவனே பூவுலகில் ஸகல ஸௌகரியங்களுடனும் வாழ உரிமை பெற்றவனாகவும் மற்ற சராசர பிராணிகள் யாவற்றும் மனிதனுடைய ஸுகாதிகளை விருத்தி செய்ய ஏற்பட்டவைகளாகவுமே நினைக்கப்படுகிறது. பசு, பக்ஷி, மரம், செடி, கொடி, எல்லாம் மனி

தனுக்காகவே ஏற்பட்டனவென்று பாத்தியம் கொண்டாடப்படு கிறது. ஆகவே மனிதனுடைய சுகத்திற்கு இடையூறு விளை விக்கக் கூடிய பிராணிகள் இருந்தால் அவைகளைக் கொன்றுதீர்க்க வேணுமென்கிற கொள்கையானது நிராக்ஷேபமாக எங்கும் பரவி நிற்கிறது. இதை மனிதனுடைய தலையிலிருக்கும் பேன் பூச்சிமுதல் காடுகளிலிருக்கும் ஸிம்மம் முதலிய துஷ்டஜந்துக்கள் வரையிலும் உதாஹரணம் கொண்டு சிந்தித்துப்பார்க்கலாம்.

மனிதஸுகத்திற்காக பிராணிகளைக் கொல்லுதல்.

பேன் பூச்சியானது தலையில் மறைந்துகொண்டு ஹிம்ஸை செய் வதால் அதை எடுத்து நசுக்கிக் கொன்று போடுகிறோம். இதுபோல் தேள், பாம்பு முதலிய கொடிய ஜந்துக்களும் மனிதனுக்கு இடை யூறு விளைப்பதாலேயே கொன்றுவிடப்படுகின்றன, வீடுகளில் பண் டங்களைப் பாழாக்கும் எலி பெருச்சாளிகளைப் பற்றி கேழ்க்கவே வேண்டியதில்லை. காடுகளில் வசிக்கும் புலி ஸிம்மம் முதலான துஷ்ட ஜந்துக்களும் எங்கு காணப்பட்டாலும் உடனே நிர்தாக்ஷிண்யமாகக் கொல்லப்படுகின்றன. துஷ்டமிருகங்களை வேட்டையாடிக் கொல்லு வதும் மனிதர்கள் நிர்ப்பயமாக வாழ வேண்டியேதான். அரசாங் கத்தாரும் மனிதஸுகத்திற்குப் பங்கம் விளைவிக்கிற எலி, நாய், விஷப்பூச்சி முதலியவைகளை அழிக்கப் பலவித காரியங்களைச்செய்து வருகிறார்கள். இந்த ஹிம்ஸைகளை எல்லாம் அஹிம்ஸாவாதிகள் அங்கீ கரிக்கிறார்களா? இல்லையா? அங்கீகரித்திருக்கிறார்களென்றால் அவர்க ளது அஹிம்ஸாவாதம் அழிந்துபோயிற்று. ஸர்ப்பம் புலி முதலிய துஷ்ட ஜந்துக்களும் பிராணிகள்தானே? மனிதனுடைய நன்மைக் காக அவைகளைக் கொல்லுவது தர்மமாகுமா? ஈசுவர ஸிருஷ்டியில் எல்லா பிராணிகளும் ஸமந்தானே, மனிதனுடைய உயிருக்கும் ஷை துஷ்டஜந்துக்களின் உயிருக்கும் வித்யாஸம் கற்பிப்பது இவர்களது ஸமதிருஷ்டிக் கொள்கைக்கு விருத்தமல்லவா?

ஆகவே, மனிதனின் ஸுகத்தைக்காக்க ஜீவ ஜந்துக்களை கொல் வது நியாயமென்றிவர்கள் ஒப்புக்கொண்டால் அஹிம்ஸா வாதத் திற்கு விலக்குவிதியை இவர்கள் அங்கீகரித்ததாகிறது. அல்லது துஷ்ட ஜந்துக்களைக் கொல்வதுகூட அதர்மமென்று இவர்கள் சொல் லுவார்களானால் மேற்படி ஜந்துக்களால் இதர பிராணிகள் அழிந்து போவதைத் தடுப்பது எப்படி? அஹிம்ஸா வாதி ஒருவரை ஸர்ப்பமோ புலியோ, வேறு துஷ்ட ஜந்துவோ ஹிம்ஸிக்கவந்தால் அவர் தன் உயிரை ரக்ஷ்யம் செய்யாமலும் ஷை ஜந்துவைக் கொல்லாமலும்

இருந்து விடுவாரா வென்பதை யார் நிர்ணயிப்பது? ஆகவே துஷ்ட ஜந்துக்களைக் கொல்லாமல் விட்டுவைப்பதும் சாஸ்திரத்திற்கும் உலகானுபவத்திற்கும், விருத்தமானதே. ஆதலால் அஹிம்ஸைக் கொள்கையை வரையறையில்லாமல் அனுஷ்டித்து விடலாமென்பது கனவுமாத்திரமே.

## அஹிம்ஸை எங்கே?

இந்த நாகரிக காலத்தில்கூட மனித ஸமூஹத்தின் ஆஹாராதிகளுக்காகப் பிரதிவருஷமும் கோடிக்கணக்கான பிராணிகள் கருணையின்றிக் கொல்லப்பட்டு வருகின்றன. இதை உலக ஸ்வபாவமென்று நினைத்து அஹிம்ஸா வாதிகள் தடுக்கமுடியவில்லை, வைத்ய பரீக்ஷைக்கு வாசிப்பவர்களுக்காக பிராணிகளின் சரீர அமைப்பைக் காட்ட விரும்பி வைத்ய காலேஜுகளில் பல பிராணிகள் கொல்லப் படுகின்றன. இந் நாகரீகக் கொலையை அஹிம்ஸா வாதிகள் ஆக்ஷேபிக்கக்காணோம். போட்டிபோட்டுக்கொண்டு ஆங்கில வைத்தியம் கற்க ஓடுகிறோம் அஹிம்ஸா வாதியென்று தன்னைப்பேசிக்கொள்ளும் நியாயாதிபதி ஒருவன் கோர்ட்டில் நூற்றுக்கணக்கான மரண தண்டனைகளை விதித்து நேரில் இருந்தும் நிறைவேற்றுகிறான். இது அஹிம்ஸையா? அஹிம்ஸாவாதியான வக்கீலும் குற்றவாளியென்று ஸம்சயிக்கப்பட்டவனைக் கொலைசெய்ய :வனுமென்று வாதாடுகிறான். அஹிம்ஸா வாதிகளான டாக்டர்களும் வியாதிஸ்தனை ஊசியால் குத்தியும் சஸ்திரங்களால் கீறியும் வியாதியஸ்தனைக் கதாச் செய்து துன்பம் விளைவிக்கிறார்கள். இவைகள் அஹிம்சைளா!

## கணக்கற்ற ஹிம்ஸைகள்!

மேலும் மனிதவாழ்க்கையில் தெரிந்தும் தெரியாமலும் தவிர்க்க முடியாத பல ஹிம்ஸைகள் நம்மால் அனுதினமும் ஆசரிக்கப்பட்டு வருவதை அஹிம்ஸா வாதிகள் மறைக்கமுடியுமா? கிருஷியை உயர்ந்ததென்று சொல்லுகிறார்கள். அதில் ஹிம்ஸையில்லையா? பூமியை உழும்போது அங்கு வாழும் பல பிராணிகள் அடிபட்டு இறந்து போவது பிரத்யக்ஷமல்லவா? பயிரின் அபிவிருத்திக்காகவென்று பல பிராணிகளைக் கொன்று எருப்போடுவதில்லையா? மரம், செடி, கொடி, பழம், ஜலம், இவைகளில் ஜீவன் இல்லையா? இவைகளை நாம் அழிப்பது ஹிம்ஸையாகாதா? மனிதர்கள் நடக்கும்போதும் உட்காரும் போதும் மோட்டார்வண்டி முதலியவைகளில் சவாரி செய்யும் போதும் பூமியில் சஞ்சரிக்கிற பற்பல ஜீவாசிகளைத் தெரிந்தும் தெரியாமலும் கொல்லுவது நமது மனதிற்குத் தெரியாதா? ஆகை

யால் அஹிம்ஸா தர்மத்தை நாம் எங்கும் ஆசரித்து விடலாமென்று நினைப்பது அசட்டுத்தனமானதே. ஆகவே கீழ்காட்டிய பலவிடங்களில் அஹிம்ஸை வாதத்தை நாம் விலக்கியே தீரவேண்டியிருக்கிறது.

இப்படி அஹிம்ஸைக்கு வரையரையும் விலக்கு விதியுமிருப்பதை யாவரும் அங்கீகரித்து அதன்படி நடந்துவருகையில் நமது சாஸ்திரம் யுத்தத்திலும் யாகத்திலும்ஹிம்ஸை செய்யும்படி விலக்கு விதி செய்திருப்பதை மட்டும் நம் அஹிம்ஸா வாதிகள் ஆக்ஷேபிக்கக் காரணமே கிடையாது.

இவர்களது அபாரகாருண்யத்தை விளம்பரம் செய்துகொள்வதற்கு இந்தசாஸ்திரிய ஹிம்ஸைகள் தானு அகப்பட்டன? கேவலம் மனிதனுடைய ஸுகத்திற்காகவும் வேறு அல்ப காரணங்களுக்காகவும் பிரதிதினமும் பிரதி க்ஷணமும் நம் கண்முன்பு நடக்கிற கோடிக் கணக்கான ஹிம்ஸையைத் தடுப்பதில் இவர்களது காருண்யம் சிறிதாவது உபயோகிக்கப்படக்கூடாதா? தன் வயிறுவளக்கவும் தன் சரீரம் புஷ்டியடைவதற்கும் வெகு உத்ஸாகத்துடன் பிராணிகளைக் கொன்றுதின்னும் கூட்டத்தார் பிறருக்கு அஹிம்ஸோபதேசம் செய்யப் புறப்படும் வெட்கக்கேட்டை வர்ணிப்பது எப்படி? பெரும்பாலும் பிராணிகளைக்கொன்று உத்பத்தி செய்யப்பட்ட ஆங்கில மருந்து வகைகளால் ஆத்மபோஷணம் செய்கிறவர்கள் அஹிம்ஸோபதேசிகளாகி விடுகிருர்கள். மதத்தின் பெயராலும், சாஸ்திரத்தின் பெயராலும் ஹிம்ஸை செய்யக்கூடாதாம். ஆனல் தன் வயிற்றுக்காகச் செய்யலாமாம். என்ன தலைகீழ்! என்ன ஜீவகாருண்யப் பிரசாரம்! என்ன ஜாலக்கண்ணிர்!! சாஸ்திரமோ ஸம்ப்ரதாயமோ ஒரு வியவஸ்தையும் இவர்களுக்கு இல்லை போலும்.

## வைதிகமத தத்வம்.

இனி ஹிம்ஸை விஷயமாக நமது வைதிகமதம் வகுத்தவழியை நாம் பரிசீலனம் செய்துபார்ப்போம். இம் மதத்தில் யாக ஹிம்ஸை யுத்தஹிம்ஸை ஆகிய இரண்டும் மிகப் புனிதமானதென்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. பிராம்ஹணுதிகளுக்குக் கட்டாயமாக விதிக்கப்பட்ட யாகங்களில் பிராணிஹிம்ஸை செய்யும்படி ஸகல வேதங்களும் விதிப்பதுடன் அந்தஹிம்ஸையானது அந்த பிராணிக்கு உயர்ந்த கதியைக் கொடுப்பதால் இதை ஹிம்ஸை என்று நினைக்கவோ,

சொல்லவோ கூடாதென்று பிரத்யக்ஷ வேதங்களில் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த யாக நியாயத்தைக் கொண்டு, யுத்த ஹிம்ஸையும் தர்மமாக நிர்ணயிக்கப்பட்டது. சாஸ்திரங்களில் "ஒரு பிராணியையும் ஹிம்ஸிக்கக்கூடா"தென்று பொதுவாக ஒரு விதியிருந்தாலும் இது, யாகயுத்தஹிம்ஸைகளைத் தவிற மற்ற ஹிம்ஸைகளையே தடுக்குமென்று விலக்குவிதியும் வேதாதி சாஸ்திரங்களிலேயே விதிக்கப்பட்டுள்ளது. இப்படி ஸித்தாந்தமிருப்பதால் பகவான் கீதையில் யுத்தஹிம்ஸையைத் தர்மமாக உபதேசித்தார்.

## கீதையின் கருத்து.

கீதையானது அவச்யஹிம்சையை தர்மமென்று போதிக்கவே ஏற்பட்டதென்று சொன்னோம். தவிர, சரீரம் வேறு ஆத்மா வேறு என்கிற தத்துவத்தை விளக்கி ஆத்மாவை எங்கும் எவ்விதத்திலும் கொல்லவோ அழிக்கவோ முடியாதென்றும் சரீரம் சட்டைபோல் அநித்யமாயும் அடிக்கடி மாற்றிக்கொள்ளக் கூடியதாயுமிருப்பதால் அதன் நாசத்தைப்பற்றிக் கவலை கொள்ளக்கூடாதென்றும் ஆரம்பத்தில் பகவான் சொல்லுகிறார். அர்ஜுனன், கொல்லுவது பாபமென்றும் ஆகவே தனக்கு வேறு சிரேயஸ்ஸைச் சொல்ல வேணுமென்றும் கேட்டும், அதற்கு பகவான் யுத்தத்தில் கொல்லுவது தர்மமென்றும் அது மோக்ஷாதி ஸாதனமென்றும் ஆகவே அதைச் செய்யாமல் விட்டால்தான் பாபமென்றும் சொல்லி க்ஷத்ரியனுக்கு தர்ம யுத்தத்தைத் தவிர வேறு சிரேயஸ்கரமான தர்மமே கிடையாதென்றும் இரண்டாவது அத்பாயத்தில் விவரிக்கிறார்; "நீ யுத்தத்தில் அடிபட்டு இறந்தால் ஸ்வர்க்கத்தை அடைவாய்; ஜயித்தால் ராஜ்பம் வரும்" என்று யுத்தத்தில் இறந்தவனுக்கு நல்லுலகம் கிடைக்குமென்று பகவான் ஸ்பஷ்டமாகச் சொல்வதைக் கவனித்தால் அஹிம்ஸா வாதிகளின் மயக்கம் தெளிந்து அவச்ய ஹிம்ஸையை அவர்கள் அசுத்தமென்று பழிப்பதை விட்டுவிட நேரும்.

## ஸ்ரீ ராமாநுஜரின் அபிப்பிராயம்.

இவர்கள், ஹிம்ஸை என்றால் என்ன? உலகத்தில் எதெது ஹிம்ஸையாகக் கருதப்பட வேணுமென்பது முதலான விஷயங்களை சாஸ்திர ரீதியிலும், தர்க்க ரீதியிலும் தெரிந்து தெளிய விரும்பினால் "ஸ்வதர்மமபிசாவேக்ஷ்ய" (2-31)என்கிற சுலோகத்தையும், அங்கு ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீ தேசிகன் இருவரும் வெகு நன்றாக வெளியிட்

டிருக்கும் ஸித்தாந்தத்தையும் கவனிக்கவேணும். இங்கு ஸ்ரீ ராமநுஜ பாஷ்யம் சொல்லுவதாவது:—

"இப்போது ஆரம்பிக்கப்பட்டிருக்கிற இந்த யுத்தமானது பிராணி மரணத்தைச் செய்யக் கூடியதாயினும், அக்நீஷோமாதி யாகத்தில் செய்யப்படும் ஹிம்ஸையைப்போல் ஸ்வதர்மமென்று நினைத்து நடுங்காமலிருப்பாயாக அக்நீஷோமீயாதி யாகப் பிராணியின் ஹிம்ஸையானது ஹிம்ஸையேயாகாது, மிகக் கீழ்ப்பட்டதான ஆடு முதலிய தேஹம் போவதுடன் மிகவும் உயர்ந்ததான தேஹத்துடன் ஸ்வர்க்காதி லோகமும் அதற்குக் கிடைப்பதாக வேதம் சொல்லுகிறது. அதுபோல் இங்கு யுத்தத்தில் இறந்தவர்களுக்கும் நல்ல தேஹமும் நல்லுலகமும் கிடைப்பதாக சாஸ்திரம் சொல்லுகிறது. ஆகையால் வியாதிஸ்தனுக்கு சஸ்திர சிகித்ஸை முதலியதுபோல் யாகத்தில் செய்யப்படும் ஹிம்ஸையானது அந்தப் பிராணியை ரக்ஷிப்பதேயாகும்" என்று யாக ஹிம்ஸையை உதாஹரணமாகக் காட்டி யுத்த ஹிம்ஸை தர்மமென்று ஸ்ரீ ராமநுஜரால் விஸ்தரிக்கப்பட்டது.

## பிர்ம்ஹ ஸூத்திரம் போதிப்பதென்ன?

வேதங்கள் யாகங்களில் பிராணி ஹிம்ஸை செய்யும்படி விதித்ததை, வேதத்தைப் பிரமாணமாக ஒப்புக்கொள்ளாத ஸாங்கிய பௌத்தாதிகள் ஆக்ஷேபித்து யாக ஹிம்ஸையை அசுத்தமென்று ஆக்ஷேபித்தார்கள். ஸாங்கிய பௌத்தாதிகள்கூட யாகத்தை ஆக்ஷேபிக்கவில்லை. யாகத்தில் ஹிம்ஸை செய்யவேண்டும் என்பதையும் ஆக்ஷேபிக்கவில்லை. வேதங்களில் யாக ஹிம்ஸையானது கட்டாயமாக விதிக்கப்பட்டிருப்பதால் அதைச் செய்து தீரவேணும் என்பதையும் அவர்களும் ஒப்புக்கொண்டுவிட்டார்கள். ஆனால், அவர்களுடைய ஆக்ஷேபம் என்னவென்றால், அந்த ஹிம்ஸையால் ஸ்வல்ப பாபம் நேரிடுமென்றும், இதை யாகம் செய்கிறவன் அனுபவிக்க வேணுமென்பதே. இவ் விஷயத்தில் வேதத்தின் ஸித்தாந்தத்தை ஸ்திரப்படுத்தி ஸாங்கியர்களின் அபிப்பிராயத்தைக் கண்டிக்கவே ப்ரம்ஹ ஸூத்திரத்தில் ஓர் அதிகரணம் பிரவிர்த்தித்தது. (பிர்ம 3-16) அந்த ஸூத்திர பாஷ்யத்தில் வைதிக மதாநுஸாரிகளான மூன்று பாஷ்யகாரர்களும் ஒரே மாதிரியாக ஸாங்கியர்களைக் கண்டித்து யாக ஹிம்ஸை வேதோக்தமானதால் தோஷமற்றது என்றும் பாபமற்றதென்றும் ஸித்தாந்தம் செய்தனர். ஆகவே, பௌத்த மதத்திற்கும் வைதிக மதத்திற்கும் யாகாதி

ஹிம்ஸை விஷயமாக அடியோடு விரோதமிருப்பதால் யாகஹிம்ஸை ஹிம்ஸையென்றும் அசுத்தமென்றும் நினைப்பவர்களுக்கு வைதிக மதத்தில் நிச்சயமாக இடமே கிடையாதென்பது ஸ்பஷ்டமாகிறது.

## ஸ்ரீ சங்கரபகவத்பாத பாஷ்யம்.

இங்கு அத்வைத பாஷ்யக்காரராகிய ஸ்ரீ சங்காசாரியார் ஹிம்ஸை செய்யக்கூடாதென்கிற பொது விதியானது யாக ஹிம்ஸையைச் செய்யும்படி விதித்திருக்கிற விலக்கு விதியால் பாதிக்கப் பட்டு விட்டதால் யாக ஹிம்ஸையில் தோஷமில்லை யென்கிறார். அந்த வாக்யமானது:—

“பசு ஹிம்ஸை சம்பந்த மிருப்பதால் யாக கர்மாவானது அசுத்தமென்று சொல்லப்படும் கக்ஷி இங்கு பரிஹரிக்கப்படுகிறது. யாக ஹிம்ஸை அசுத்தமல்ல. தர்மா தர்மங்களை அறிய சாஸ்திரமே ஹேதுவாயிருக்கிறது. இது தர்மம் இது அதர்மம் என்று அறிய சாஸ்திரமே காரணம். இவ்விரண்டும் இந்திரியங்களைத் தாண்டிய விஷயமல்லவா? குறிப்பிட்ட தேச, கால, நிமித்தங்களை உடைய வைகளாயு மிருக்கின்றன. எந்த தேசத்தில் அல்லது காலத்தில் அல்லது எந்த நிமித்தத்தில் ஒன்று தர்மமென்று ஆசரிக்கப்படுகிற தோ அதுவே வேறு கால தேச நிமித்தங்களில் அதர்மமாக ஆகி விடுகிறது. ஆகையால் சாஸ்திரத்தைவிட்டு தர்மா தர்ம அறிவு ஒருவனுக்கு இல்லை.

சாஸ்திரங்களால்தான் ஹிம்ஸை கலந்த ஜ்யோதிஷ்டமாதி யாகங்கள் தர்மமென்றே நிச்சயிக்கப்பட்டிருப்பதை எப்படி அசுத்த மென்று சொல்ல முடியும்? “ஒரு பிராணியையும் ஹிம்ஸிக்கக் கூடாதென்கிற சாஸ்திரமே யாக ஹிம்சையையும் அதர்மமாகச் சொல்லுவதாக நினைக்கக்கூடாது. ஏனெனில், அந்த சாஸ்திரம் பொதுவிதி. யாக ஹிம்ஸை விதியோவென்றால் விலக்கு விதி யாகும். ஆகையால் வைதிக கர்மாவாகிய யாகமானது மிகவும் பரிசுத்தமானதே. சிஷ்டர்களால் அது இன்றுவரை அநுஷ்டிக்கப் பட்டு வருவதாலும் சிஷ்டர்களால் நிந்திக்கப்படாம லிருப்பதாலும் அது பரிசுத்தமானதே.”

ஸ்ரீ சங்காசாரியார் கீதை 2-வது அத்யாயம் 11-வது சுலோக அவதாரிகையிலும் “வைதிக தர்மங்கள் ஹிம்சையுடன் கூடியவைக ளாதலால் அதர்மங்களென்கிற சங்கையும் செய்யலாகாது. ஆசார்

யன், கூடப்பிறந்தவன், பிள்ளை முதலானவர்களைக் கூடக் கொல்லு வதாகிய மிகக் குரூரமான யுத்தமானது க்ஷத்திரியனுக்கு ஸ்வதர்ம மாகையால் அது அதர்மமாகாது. இந்த ஸ்வதர்மத்தைச் செய்யா விட்டால் பாபம் நிச்சயம் வருமென்று பகவான் உபதேசிப்பதால் யாகாதி நித்யகர்மங்களில் கட்டாயமாகச் செய்து தீரவேண்டிய ஹிம்ஸைகளும் தர்மங்கள்தான் என்று பகவானல் நிச்சயமாகச் சொல்லப்பட்டதாகிறது" என்று யுத்த யாக ஹிம்ஸைகளைத் தர்மங் களென்றே நிச்சயித்தார்.

த்வைத பாஷ்யக்காராகிய ஸ்ரீ ஆனந்த தீர்த்தரும் மேற்படி பிரம்மஸூத்திர பாஷ்யத்தில் "வேதத்தில் சொல்லப்படாத ஹிம்ஸை யைச் செய்வது பாபமேயல்லது, வேதங்களில் விதிக்கப்பட்ட யாக ஹிம்ஸையில் ஒரு தோஷமும் கிடையா"தென்று ஸ்பஷ்டமாகச் சொன்னர்.

வைஷ்ணவ ஆசார்யர்களாகிய ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீ தேசிகாதிகள் இவ் விஷயத்தில் இன்னெருபடி முன்சென்று இந்த ஹிம்ஸை ஹிம்ஸையே அல்லவென்றும், இது ரக்ஷணவென்றும் ஸித்தாந்தம் செய்தார்கள். இந்த யாக ஹிம்ஸை ஹிம்ஸையேயல்ல வாகையா லும் இது ரக்ஷணமாகையாலும் "ஹிம்ஸிக்கக்கூடா"தென்ற பொது விதிக்குள் இது அகப்படக்கூடியதில்லையென்று நிர்ணயித்தார்கள்.

இவ்விஷயம் மேற்படி ஸூத்திர பாஷ்யத்திலும் தாத்பர்ய சந்திரிகையிலும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. சாந்தோக்ய சுருதி யில் "அஹிம்ஸன் ஸர்வ பூதானி" என்கிற வாக்கியத்திலும் வேறு சிலவிடங்களிலும் யாக ஹிம்ஸையை ஹிம்ஸையென்று அநுவதித் திருப்பதால் இது ரக்ஷணமென்று சொல்லத் தகுமோவென்று ஸ்ரீ தேசிகன் சங்கித்து "யாக பசு முதலானவைகளுக்குப் பரலோ கத்தில் உண்டாகிற விசேஷ நன்மைகளையறியாத பாமரர்களுடைய எண்ணத்தையே அந்த சுருதி அநுவதிக்கிறதேயல்லது அதற்கும் இது ஹிம்ஸையல்ல வென்பதிலேயே தாத்பர்யம்" என்று ஸமா தானம் அருளிச் செய்தார்.

இதுபோல் மநுஸ்மிருதியில் "யாகத்தில் வதமானது வதமா காது" என்று சொல்லுகையில் வதம் என்று அநுவதித்திருப்பதும் பாமரர்களுடைய எண்ணத்தை யநுசரித்தே. 'அவதம் என்பதே தத்வமாகும்' என்றும் ஸ்ரீ தேசிகன் சொல்லி யாகாதி ஹிம்ஸையை ஹிம்ஸையென்றே சொல்லக்கூடாதென்று நிர்ணயித்தார்.

ஸ்ரீ தேசிகன் 'பரமத பங்கம்' என்கிற தமிழ் கிரந்தத்தில் இவ் விஷயத்தை விளக்கியிருப்பதையும் இங்குக் காட்டுவது பொருந்தும். அங்கு ஸ்ரீ தேசிகன் வாக்யமாவது:—"தர்மா தர்ம வியவஸ்தாபக மான சாஸ்திரத்தினுல் அக்நீஷோமாதி ஹிம்ஸைகளிலும், யுத்தத் தில் வதார்ஹன் விஷயத்திலும் .... ...., பாபத்வ சங்கை பண்ண வொண்ணுது, அனர்த்த ஹேதுவன்று. இது சிகித்ஸக ஸல்யப் பிரயோகாதி நியாயத்தால் ஹிததமமாம். ஆகையாலே ஸங்க்யாதி கள் சொன்ன ஸ்வல்பதோஷ ஸங்காத்துக்கும் அவகாசமில்லை. இவ்வர்த்தத்தை "அசுத்தமிதி சேꞏ் என்று நசப்தாத்" என்று வே தாந்த ஸூத்ரக்காரர் அருளிச்செய்தார்.

## மனுஸ்மிருதி.

சொல்லுவதாவது:—

பசுக்கள் பிரம்ஹாவினுல் யாகத்திற்காகவே ஸிருஷ்டிக்கப்பட் டன. யாகமானது இவ்வுலகத்திற்கு க்ஷேமத்தின் பொருட்டே யாகும். ஆதலால், யாகத்தில் வதம் செய்வது வதமேயல்ல. 5-33

ஓஷதி, பசு, விருக்ஷம், பக்ஷி முதலியவை யாகத்திறகாகக் கொல்லப்பட்டால் உயர்ந்த கதியை அடைகின்றன. 5-39

மதுபர்க்கம், யாகம், பிதிரு கார்யம் ஆகியவை தவிர மற்ற விடங்களில் ஹிம்ஸை கூடாது என்று மனு வாக்யமாம். 5-40

வேத தத்துவத்தை அறிந்த த்விஜன் மேற்கண்ட கார்யங்க ளில் பசு ஹிம்ஸையை செய்து, தன்னையும் மேற்படி பசுக்களையும் உத்தமகதி அடையச் செய்கிருன். (5-41) இந்த சாரசு பிராணி விஷயத்தில் வேத விஹிதமான ஹிம்ஸையை அஹிம்சையாகவே நினைக்கவேண்டும். வேதத்திலிருந்து தர்மமல்லவோ வெளிப்பட் டது. 5-42

இன்னுமிதுபோல் கணக்கற்ற சுருதி ஸ்மிருதி புராணுதிப் பிரமாணங்களை விஸ்தார பயத்தினுல் இங்கு நாம் காட்டவில்லை.

## ஹிம்ஸை என்றால் என்ன?

ஆனுல், பிரத்யக்ஷத்தில் ஹிம்ஸையாயிருக்கிற விஷயத்தை "அஹிம்ஸை" என்றும் ரக்ஷணம் என்றும் ஸாதிப்பது பொருந்து

மாவென்று சிலர் நினைக்கக்கூடும். இதற்காகவே ஸ்ரீ ராமாநுஜரால் வைத்தியர்கள் செய்யும் ஆயுத சிகிச்சையானது உதாஹரணமாகக் காட்டப்பட்டது இங்கு ஹிம்ஸையென்றால் என்ன? அதற்கு லக்ஷணம் எப்படிச் சொல்வது என்பதை யோஜிக்கவேணும். ஒருவனுக்கு துக்கத்தை உண்டுபண்ணுவதே ஹிம்ஸையென்று சொன்னால், வைத்தியர்கள் சரீரத்தில் ஆயுதங்களைக்கொண்டு நோயாளி கதறித் துடிக்கும்படி மிகவும் உபத்ரவகாமான சிகித்ஸை செய்வதும் ஹிம்சையாகிவிடும். இதை ஹிம்ஸை என்று ஒப்புக் கொள்ளுவது நியாயமா?

பிராணனை எடுப்பதே ஹிம்ஸையென்றால் திருடர்களும் வேறு துஷ்டர்களும் பிராணனை எடுக்காமலே சரீரத்தில் பயங்கரமாகக் காயங்கள் உண்டுபண்ணுவதும், ஒருவனுடைய சொத்துக்களனைத் தையும் பிறர் பறித்துக்கொண்டுபோவதும், உயிருடன் அனுபவிக் கும் பற்பல கஷ்டங்களும் ஹிம்சையென்று சொல்ல முடியாமல் போய்விடும். ஆகவே "தத்காலத்தில் சிரமத்தைக் கொடுப்பதும் பரலோகத்தில் அனர்த்தத்தை (பாபத்தை) உண்டுபண்ணக் கூடி யதுமான கார்யமே ஹிம்ஸை" என்று லக்ஷணம் ஒத்துக்கொண்டா லன்றி ஒன்றும் ஸரிப்படாது. டாக்டர்கள் ஆயுதங்களால் சரீரத் தைக் கீறி வியாதியஸ்தன் கதறும்படி ஹிம்ஸை செய்தாலும் அது ஹிம்ஸையாகிறதில்லை, ஏன்? அந்த ஹிம்சையானது வியாதியஸ் தனுக்கு தத்காலத்தில் உபத்திரவகாமாயிருப்பினும் அது அவனை ரக்ஷிப்பதற்கென்றே செய்யப்படுகிறது. ஆகையால், அதைச் செய்கிறவன் எவ்வளவு கருணையற்றவனா யிருப்பினும் அவனை ஹிம்ஸை செய்பவனாக உலகமும், சாஸ்திரமும் நினைப்பதில்லை.

ஆகையால், ஸ்ரீ ராமாநுஜரும், ஸ்ரீ தேசிகனும் யாக ஹிம் ஸைக்கும், யுத்த ஹிம்ஸைக்கும் ஆயுத ச்கித்ஸையை உதாஹரண மாகக் காட்டினார்கள். யாகத்திலும், யுத்தத்திலும் கொல்லப்படும் ஸமயத்தில் அந்தப் பிராணிக்கு சரீர வேதனை இருந்தாலும், பிறகு நல்ல சரீரம், நல்லுலகம் இவைகள் கிடைப்பதாக சாஸ்திரங்கள் உத்கோஷிப்பதால் இது ஹிம்ஸை லக்ஷணத்தில் அகப்படாத அஹிம்ஸையே என்றும் ஸ்ரீ ராமாநுஜ ஸ்ரீ தேசிகாதிகளின் ஸித் தாந்தமாகும்.

### நிந்தை வேண்டாம்.

இவ்வாறு யாக ஹிம்ஸையையும், யுத்த ஹிம்ஸையும் மிகவும் புனிதமான கர்மமாயிருப்பதால் இவைகளை எந்த ஆஸ்திகனும்

ஹிம்ஸை என்று நினைப்பதும், பேசுவதும், பழிப்பதும், நரகாதி மஹா பாபத்திற்கு இடமாகையால் அப்படிச் செய்யக்கூடாதென்று தடுத்து சாஸ்திரங்களும், மகரிஷிகளும் ஆசாரியாரும் வேதமார்க்கத்தை ரக்ஷித்திருக்கிறார்கள். இவைகளைப்பற்றி புராணாதிகளில் எங்காவது நிந்தை கண்டால் அது அந்த பிரகரணத்தை யநுஸரித்து மற்றொன்றை ஸ்துதி செய்ய வந்ததாகுமேயன்றி, பிரமாணங்களில் மிக பிரபலமானதாகிய வேதங்கள் சொல்லிய தர்மத்தைத் துர்பலங்களாகிய புராணாதிகள் நிந்திக்கச் சக்தியற்றவைகளென்றும் முன்னோர்கள் நிர்ணயித்தார்கள். ஆகவே, நமது நவீன மேதாவிகளுக்கும் ஹிம்ஸை, அஹிம்ஸை, வர்ணாச்ரம தர்மம் இவைகளுக்குச் சாஸ்திரங்களையே நம்பவேண்டிய நிர்பந்தம் இருப்பதாலும், கீதையில் பகவான் கார்யம், அகார்யம் இவைகளுக்கு சாஸ்திரமே யாவருக்கும் கதியென்றும், சாஸ்திர விதிகளைக் கைவிட்டு ஸ்வச்சந்தமாகத் திரிகிறவர்களுக்கு நரகாதிகளே உண்டாகுமென்றும் ஸ்பஷ்டமாகச் சொல்லுவதாலும், நம்மவர்கள் தேசத்தில் பரவி வரும் குயுக்தியான நாஸ்திக வாதத்தைவிட்டு, வேத ஸ்மிருதி சிஷ்டாசார மார்க்கத்தில் நின்று ஸகல சிரேயஸ்களையும் அடைவார்களாக.

---

## ஒரு உபந்நியாசம்.

கும்பகோணத்தில் நடைபெற்ற வாஜபேய மஹா யாகத்தில் ஒவ்வொருநாளும் பல பிரபல பண்டிதர்கள் யாகத்தின் மகிமையைப் பற்றிப் பிரஸங்கம் செய்துவந்தார்கள். இவைகளில் ஸ்ரீ. உ. வே. அக்னிஹோத்ரம் தாத தேசிக தாதாசாரிய ஸ்வாமிகள் யாக மஹிமையைப் பற்றியும், அதில் சொல்லப்படும் சில ஆக்ஷேபங்களைப் பற்றியும் பிரஸ்தாபித்து ஒரு பிரஸங்கம் செய்தார்கள். அவர் பேசியதின் ஸாரமாவது:—

### ஹிம்ஸையாகாது.

யாக விஷயத்தில் அநேக ஆக்ஷேபங்கள் சொல்லப்படுகின்றன. அவை பொன்றும் நிலைக்கக்கூடியவை யல்ல. சிலவற்றை மட்டும் இன்று பிரஸ்தாபிக்கிறேன். முதலில் ஹிம்ஸையை எடுத்துக் கொள்ளுவோம். வைதிக மதமானது யாகத்தில் செய்யப்படும் ஹிம்ஸையை ஹிம்ஸையாகவே நினைக்கக் கூடாதென்று நிர்ணயித்திருக்கிறது. வேதங்களில் இந்த ஹிம்ஸை விதிக்கப்பட்

டிருக்கிறது. பௌத்தர் முதலிய வேத விரோதிகள் இதை அசுத்த மென்கிறார்கள். நம்முடைய முன்னோர்களான ரிஷிகள், வேத பலத்தைக்கொண்டு பௌத்தாதிகளுடைய கொள்கையைக் கண்டித்து வேத விஹித ஹிம்ஸை பரிசுத்தமானதென்று நிச்சயித்தார்கள். இதற்கென்றே பிரம்மஸூத்திரத்தில் ஓர் அதிகரணம் ஏற்பட்டிருக்கிறது. இந்த இடத்தில் மூன்று மதாசாரியர்களும் எவ்வித அபிப்பிராய பேதமும் இல்லாமல் யாக ஹிம்ஸை பரிசுத்தமானதென்று ஸ்தாபித்துள்ளார்கள். இக்காலத்தில் அஹிம்ஸா வாதம், ஜீவ காருண்யம் என்ற வேஷம்போட்டுக்கொண்ட பலர் இந்தப் புனிதமான கார்யத்தைப் பழிக்கப் புறப்பட்டிருக்கிறார்கள். இவர்களுடைய அஹிம்ஸா வாதமானது நிலைத்திருக்கக்கூடியதல்ல, சொந்தக் கார்யங்களை உத்தேசித்தும், தன் வயிறு வளர்க்கவும் கணக்கற்ற ஹிம்ஸைகளை அவர்கள் செய்தோ, செய்வித்தோ வருவது யாருமறிந்ததே. யுத்தத்தில் வெகு உத்ஸாகத்துடன் மனிதர்களைக் கொலை செய்கிறார்கள். வீடுகளில் எலி, பெருச்சாளி முதலிய பிராணிகளை நிர்த்தாக்ஷிண்யமாகக் கொல்லுவதும், நாய் முதலிய பிராணிகளைக்கொண்டு கொல்லச் செய்வதும் நடக்காத விடம் உண்டா? க்ருஷியில் ஹிம்ஸை இல்லையா? பூமியை உழும்போது எவ்வளவு பிராணிகள் அடிபட்டு இறந்துபோகின்றன தெரியுமா? டாக்டர்களுக்காகப் பல பிராணிகள் கொல்லப்பட்டுப் பரீக்ஷை செய்யப்படுகின்றன.

அரிசி முதலியவைகளில் பூச்சி உண்டாகிவிட்டால் தாக்ஷிண்யமின்றி அவைகளை உரலில்போட்டுக் குத்திக் கொலை செய்துவிட்டு அந்த அரிசியைச் சாப்பிடுவது ஸஹஜமாயிருக்கிறது! ஈ, எறும்பு முதலியவைகள் ஸம்பந்தப்பட்ட பண்டங்களைக் காப்பாற்றுவதற்காக அவைகளை கடும் வெய்யிலில் போட்டு அந்தப் பிராணிகளைக் குரூரமாகக் கொன்றுவிட்டு அந்தப் பண்டங்களை வயிற்றுக்கு உபயோகிக்கிறோம். கறி, காய், இலை, நெல், அரிசி இவைகளில் ஜீவன் இருக்கிறது. இவைகளை அழிக்காத மனிதன் இல்லை. இந்த வகையில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மனிதனுக்கும் ஐந்துவிதமான ஜீவ வதை ஏற்படுவது இன்றியமையாததென்று மநு முதலியவர்கள் சொல்லி அதற்குப் பிராயச்சித்தமாகப் "பஞ்சமஹா யக்ஞம்" என்ற கர்மாவைக் கட்டாயமாக விதித்துள்ளார்கள்.

இம்மாதிரி எவ்வளவோ கணக்கில்லாத ஹிம்ஸைகள் இக்காலத்தில் கூட ஸஹஜமாக நடக்கின்றன. இவைகளைப்பற்றி

அஹிம்ஸா வாதிகளும், ஜீவகாருண்ய சங்கத்தாரும் என்ன பதில் சொல்லுவார்கள்? இத்தகைய் பேர்வழிகள் புனிதமான யாக ஹிம்ஸையை மட்டும் என் கண்டிக்க வேண்டும்? யாகத்தில் உபயோகப்படும் பிராணிக்கு உயர்ந்தகதி ஏற்படுவதாக நம்முடைய சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. இதனாலேயே யாகங்களுக்கு "அத்வரம்" (ஹிம்ஸையற்றது) என்ற பெயர் வழங்கப்படுகிறது.

### அர்த்தஞானம் அவச்யமில்லை

வேறு சிலர் யாக மந்திரங்கள் யாவற்றுக்கும் அர்த்தம் தெரிந்துகொண்டுதான் யாகம் செய்யவேண்டுமென்றும் இல்லையேல் பிரயோஜனமில்லையென்றும் வாதிப்பதுண்டு. யாகம் செய்யவோ, செய்து வைக்கவோ மனமில்லாதற்கு இது ஒரு வியாஜமான பேச்சேயல்லாது சாஸ்திரீயமான வாதமாகாது. மந்திரங்களுக்கு அர்த்தம் தெரிந்துகொண்டு கார்யம் நடத்துவது விசேஷம் தான். அதில் ஒருவருக்கும் ஆக்ஷேபமில்லை. ஆனால், அது கட்டாயமல்ல. மந்திரார்த்தம் தெரியாதகால் யாகத்திற்கோ அதை யனுஷ்டிப்பவருக்கோ எவ்விதக் குறையும் கிடையாது. "பவதி பிக்ஷாம் தேஹி" என்று ஒருவன் சொல்லுகிறான். அதன் அர்த்தமென்னவென்று அவனுக்குத் தெரியாது. ஆயினும், இதைச் சொன்னவுடன் அவனுக்குப் பிக்ஷை கிடைத்து அவனது மனோரதம் நிறைவேறிவிடுகிறது. பிக்ஷை போடுகிறவர்கள் அவனுக்கு அர்த்தஞானமிருக்கிறதாவென்பதைப்பற்றிச் சிந்திக்கிற வழக்கமில்லை. அதுபோல் அர்த்தஞானம் இல்லாமலே ஒருவன் மந்திரத்தைச் சொல்லிவிட்டாலும் அந்த மந்திரத்தால் ஸ்துதி செய்யப்படுகிற தேவதை இவனது அபிப்பிராயத்தை அறிந்து இவன் கேட்டபலனை கொடுத்துவிடுகிறது இதுதான் சாஸ்திர தத்வம். இதை ஒப்புக்கொண்டாலல்லது ஸந்தியா வந்தனம் முதலிய எந்தக் கர்மாவையும் நாம் அனுஷ்டிக்க யோக்யதை யற்றவர்களாகவே ஆகிவிடுவோம். இது விஷயமாக பல ஆக்ஷேப ஸமாதானங்களை வெளியிட்டுப் பல பெரியோர்கள் மீமாம்ஸை முதலியவற்றில் ஸித்தாந்தம் செய்திருக்கின்றார்கள். ஆகையால் அர்த்தஞானம் கட்டாயமானதல்ல. இந்த காரணத்தைச் சொல்லி யாகத்தை வெறுப்பது அநியாயமானதே.

### யாசகம் வாங்குதல் அவச்யம்.

இன்னும் சிலர் யாகத்திற்குத் திரவிய உபகாரம்செய்ய இஷ்டமில்லாததற்காக ஏதாவது குதர்க்கம் பேசுவது வழக்கமாயுள்ளது. திரவியங்களை யாசகம் செய்தாவது எதற்காக யாகம் செய்ய

வேண்டும் என்று இவர்களுடைய வாதமாகும். யாகம் உலக க்ஷேமத்திற்காகச் செய்யப்படுவதால் ஒவ்வொருவரும் அதற்கு உபகாரம் செய்யவேண்டிய தவச்யமென்று சாஸ்திரம் விதிக்கிறது. ஆதலால், யாகம் செய்கிறவன் எவ்வளவு பணக்காரனாக இருந்தாலுங்கூட அவன் பிறரிடமிருந்து சிறிது திரவியமாவது யாசகம் வாங்கியே தீரவேண்டும். வேதங்களும் கல்பஸூத்ரங்களும் இதை வற்புறுத்துகின்றன. யாக மத்தியில் ஒழிவு காலம் ஏற்படுத்தி அக்காலத்தில் திரவிய யாசகம் செய்து வரும்படி ஸூத்ரக்காரர்கள் விதித்திருக்கிறார்கள். ஆகையால், யாசகம் செய்தல் யாகத்திற்கு அங்கமாகிறது. சில வருஷங்களுக்கு முன் திருவிடைமருதூரில் யாகம் செய்த மாஜி இஞ்ஜினீர் ஒருவர் தாம் பெரிய தனவானாக இருந்தபோதிலும் அங்கு வந்திருந்த ஒரு பிராம்மணரிடம் இரண்டணாவை மட்டும் யாசகமாக வாங்கியே யாகத்தை நடத்த வேண்டியதாயிற்று.

### கலியிலும் செய்யலாம்.

வேறு சிலர் யாகம் எவ்வளவு உயர்ந்ததாக இருந்தபோதிலும் இந்தக் கலியில் செய்யலாகாதென்று பேசுவது வழக்கமாயுள்ளது. ஏன் ஆகாதென்று நமக்குத் தெரியவில்லை. கலியில் தள்ளத்தகுந்த கர்மாக்களை ரிஷிகளே பொறுக்கி எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அவைகளில் அஜம் அல்லது ஆடுகளைப் பசுவாக வைத்து நடத்த வேண்டிய யாகங்கள் கலியில் தடுக்கப்படவில்லையே? அச்வாலம்பம் கவாலம்பம் போன்ற குறிப்பிட்ட சில யாகங்களையே கலியில் தடுத்தார்கள். ஆகையால், இந்த வாதமும் பிரமாணமற்றதே யாகும். முன்யுகங்களில் யாக மத்தியில் பசுவைக் கொல்லும் கார்யத்தை பிராம்மணர்களே நேரில் செய்து வந்தார்கள், ஆனால், கலியுகத்தில் அந்தக் கார்யத்தை பிராம்மணன் செய்ய வேண்டாமென்று தடுத்து வேறு ஜாதியாரைக்கொண்டு அதைச் செய்யும்படி விதிக்கப்பட்டிருக்கிறது இதைக் கவனித்தாலும் கலியில் யாக பசு ஹிம்ஸை தடுக்கப்படவில்லையென்பது விசதமாகும்.

இன்னும் இதுபோல் பல ஆக்ஷேப ஸமாதானங்களை விவரிக்க வேண்டியிருந்தாலும் அவகாசக் குறைவால் இத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறேன்.

---

## வாஜபேய யாகம்.

### ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமிகளின் ஸ்ரீமுகம்.

யாகஞ் செய்யும் விஷயத்தில் ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்காராச்சார்ய ஸ்வாமிகளவர்களால் அநுக்ரகிக்கப் பட்ட சம்மதப் பத்திரிகை.

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய விருதங்களா லங்கரிக்கப்பெற்ற ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளவர்களால் நமக்கு பிரிய சிஷ்யர்களான தேவ கோட்டையில் வஸிக்கும் பண்டித கிருஷ்ண சாஸ்திரி, நியாயவாதி (வக்கீல்களான) சுப்பிரமணிய அய்யர், நாகஸ்வாமி அய்யர், நாக ரத்ந சாஸ்திரி, சேஷய்யர் முதலிய மஹாஜனங்களுக்கு நாராயண ஸ்மரணத்தை முன்னிட்டு ஆசீர்வதிக்கப்படுகிறது.

அத்தாழநல்லூர் கிராமத்தில் வசிக்கும் யக்ஞேஸ்வர ராம சாஸ்திரி தீக்ஷிதராலும் மதுரையில் வசிக்கும் பாலசுப்பிரமணிய சாஸ்திரிகளா லும் அனுஷ்டிக்கப்படும் கருட சயனத்துடன் கூடிய மஹாவாஜ பேயம், அக்னிஷ்டோமம் என்ற யாகங்களை நடத்திவைத்து லோக க்ஷேமத்தைச் செய்வதற்காக ஏற்பட்ட உங்களுடைய முயற்சியை உங்கள் விக்ஞாபன பத்திரிகையால் தெரிந்து மிகவும் சந்தோஷிக் கின்றோம். எந்தக் கர்மாவால் தனக்கும் உலகங்களுக்கும் பெரிய வளர்ச்சி யுண்டாகுமோ அவ்விதமான வேதத்தில் கூறிய யக்ஞத் தை சாதுக்களின் சகாயத்தால் குறித்த காலத்தில் விதி தவறாமல் நடத்திவைத்து ஸ்ரீ சந்திர மௌளீஸ்வர அநுக்ரஹத்தால் தங்கள் முதலியவர்கள் யக்ஞம் செய்யும் யஜமான தீக்ஷிதர்களும் சிரேயஸ் களை யடைய வேண்டுமாக ஆசீர்வதிக்கின்றோம்.

## வேட்டலும் பிதற்றலும்.

### A. விசுவநாதன் தண்டாங்கோறை.

*ஸ்வதர்மோ விகுண: ச்ரேயாங்பரதர்மாத் ஸ்வநுஷ்டிதாத்*
*ஸ்வதர்மே நிதநம் ச்ரேய: பரதர்மோ பயாவஹ:*

நமது முன்னோருடைய பரந்த அறிவை நாம் இப்பொழுதே சிறிது சிறிதாக அறியத் தொடங்கியுளோம். அவர்களுடைய பழக்க வழக்கங்களே சிறந்தன என்பதாக யுக்தி மூலமாக சாதிக்கப் படுகிறது. ஆனால், சிலரோ தங்களது புல்லறிவே சிறந்தனதென்ற வகத்தால் நம் முன்னோர் வகுத்த வழிகளைப் பழிக்க ஆரம்பிக்கின்றனர். சிலரோ அயல் நாட்டார் இயற்றிய மொழிபெயர்ப்புகளிலிருந்தும் ஆராய்ச்சிகளிலிருந்தும் நம் நூல்களின் சிறப்பை யுணர விரும்புகின்றனர். நமது பழக்க வழக்கங்களோ நூல்களின் தன்மையோ இத்தகையதென சிறிதுமறியாத பிறர் கூற்றே சில அறிவிலிகளுக்கு வேதவாக்கு போன்றுள்ளது பரிமேலழகருடைய வடமொழி தென்மொழி இரண்டிலுமுள்ள பயிற்சியில் நூறிலொரு மடங்குமில்லாத சிலர், அவருடைய திருக்குறளுரையில் குறைகூற முன் வருவதேபோல அந்தணரது அறுதொழில்களி லொன்றாய யாகத்தை நடத்துவதைக் கண்டு சிவப்பாடையைக் கண்ட காளை போல மிரளுகின்றனர். பரிமேலழகருடைய மேற்கோள்கள் இன்னின்ன நூல்களிலிருந்து எடுக்கப்பட்டன என்று அறியமுடியாத புலவர்கள் அவரைவிட அழகாக நூல்கள் நயங்கண்டு உரை வகுக்க முன்வருவது பொருத்தமானதன்றே! இங்ஙனமே நமது மதத்தின் சிறப்பும் பெருமையும் தத்துவமும் இன்னதென்று அறியாத சிலர் கூற்றும் பொருத்தமானதே.

அறிவிலிகளும் மதப் பற்றற்றோரும் யாதுகூறினும் யாதுவரையினும் நாம் வருந்தவோ மறுப்புரை வரையவோ சிறிதுமிடமில்லை. தமிழ் நூல்களை முறையே கற்று சாஸ்திர ஞானமும் சிறிதுபெற்று ஆனந்தபோதினி மூலமாக வாசகர்கட்கு இன்பமளித்து வந்த சித்தூர் பண்டிதர் ஸ்ரீமான் பூ. ஸ்ரீனிவாஸன் என்பார் பொறுமையிழந்து வேள்வி யியற்றுவதைத் தூற்ற முன்வந்ததைக் காண வருந்தாதார் யார்? இவர் இதுவரை வரைந்த கட்டுரைகளில் ஒன்றுவது "யாகமா! மாமிச போகமா!" என்ற கட்டுரையைப்போல் யுக்தி சிறிதுமில்லாது பாமரத்தம் கட்டுரைக்கு நிகராக விருப்ப தொன்றை நாம் கண்டதில்லை,

"அந்தணர் தொழில்களிலொன்றாய வேள்வியை இக்காலத்தும் அன்னார் இயற்றி வருவதை வேண்டாமென்று கூறவில்லை. அப்படிக்கூற அதிகாரமுமில்லை" என்றுகூறுமிவர். மேலே ஒன்றும் எழுத இடமில்லை. ஆயினும், பல தீய காரியங்களும் வேள்வி காலத்தில் செய்யப்படுகின்றன" என்று பகருகிறார். யாகத்தில் பலதீய கார்யங்கள் என்னென்ன நடக்கின்றன? அதனையறிவோம் என பரபரப்புடன் மேலே படிக்கத் தொடங்கினோம். ஆடுகளைக் கொல்லுகின்றனர் என்றார். தீய கார்யம் ஒன்றாயிற்று. பன்மையும் அதற்கு அடைமொழியும் பிரயோகித்துள்ளாரேயென்று கட்டுரையைத் திருப்பித் திருப்பிப் படித்தோம். வேறு தீய செயல் ஒன்றும் நடத்துவதாக அவர் குறிப்பிடவில்லை. எனவே பல தீய கார்யங்கள், அவர்தம் கருத்திற்கேற்ப ஆடுகளை வதைப்பதைத் தவிர வேறு இல்லையென அறிய முடிந்தது. யாகம் என்பது அந்தணர் தொழில்களில் ஒன்றென்பதும், அதைத் தடுப்பது மடமையென்றும் இவரால் முன்னமே யேற்றுக்கொள்ளப்பட்டது. அதில் ஆடுகளை கொல்வதே அவருக்குப் பிடிக்காத செயல். அதைச் சற்று ஆராய்வோம்.

யாகம் செய்யவேண்டும் என வேதத்தால் விதிக்கப்பட்டிருக்கிறது. வேதத்தை நம்பும் ஒருவனே இந்துமதத்தைச் சேர்ந்தவன் எனக் கூறிக்கொள்ள அருகனாவான். எனவே, வேதத்தில் விதிக்கப் பெற்ற யாகத்தைத் தடுக்கவோ, குறை கூறவோ எந்த இந்துவுக்கும் உரிமையில்லை. இந்து மதத்தைச் சேராத பிறர் கூறுவதையும் நாம் லக்ஷ்யம் செய்ய அவசியமில்லை இந்துமதம் எத்தகையதென்று அறியாமல் அதில் இல்லாத குற்றத்தைச் சுமத்தி அணுவை மலையாக்கிக் கூச்சல்போட முன்வருவதே நகைப்புக்கிடமாகின்றது. புத்தர் பெருமான் திருமாலுடைய அவதாரம். அவர் இந்து மதத்திலிருந்தே யாகம் செய்வது தவறென்பது பகர்வது பிசகென்றுணர்ந்து பிற மதத்தைத் தழுவி அதை மறுக்கத் தொடங்கினர்.

அவரால் செய்து முடிக்கவியலாத கார்யத்தைச் சிலர் குடியாசு போன்ற பத்திரிகைகளில் கட்டுரை வரைந்து வெளியிடுவதன் மூலமாகச் செய்து முடிக்கக் கருதுவது மலையைத் தன்னிறகின் காற்றால் புறட்ட நினைத்த கொசுவின் கதையை நினைப்பூட்டுகிறது. நிற்க, யாகத்தில் ஆடுகளைக் கொல்லுவது வேதத்தில் கூறப்பட்டது. எனவே, ஒவ்வொரு இந்துவும் யாகம் செய்யும்போது ஆடுகளைக்

கொல்லுவதைத் தடுக்க இடமில்லை. "வேதம் இம்மாதிரி ஆடுகளை கொல்லும்படி சொல்லலாமா?" என்ற சந்தேகத்தைப் படித்தவர்களிடம் கேட்டுத் தெரியவேண்டுமேயன்றித் தன் சிற்றறிவுக்கேற்ப ஏதோ வுரைப்பதழகன்று. "யாக காலத்தில் ஆடுகளை வதைத்தல் வேண்டுமென சாத்திரம் கூறுகிறதெனின், ஒரு உயிரைக் கொலை செய். அப்படிச் செய்தால் நன்மையுண்டாம் என ஒரு சாத்திரம் கூறுமா?" என வினவுகிறார். இந்த யுக்திவாதம் எவ்வளவு அழகாயிருக்கிறது பாருங்கள். மேலும், ஆடுகளை வேள்விக் காலத்து வதைப்பது அநுமதிக்கப்பட்டதே என்று இவரே பிறகுஎற்றதனால் நாம் அதற்கு சமாதானம் கூறவேண்டிய அவசியமில்லையெனினும், யாகத்தில் ஆடுகளைக்கொல்லுவது ஹிம்ஸையேயல்ல என்பது மீமாம்ஸா சாஸ்திரத்தின் கொள்கையென அறிவுறுத்த விரும்புகின்றோம்.

"நரமேதம் நியோகம் முதலியன முற்காலத்தில் அனுஷ்டானத்திலிருந்தன. அவை இக்காலத்தில் இல்லையே, அங்ஙனமே யாகத்தில் பலியிடுவதை ஏன் நிறுத்தக் கூடாதென இவர் கேட்கிறார். நாமாக ஒன்றை நிறுத்தவோ, புதிதாக வொன்றை ஆக்கவோ சாத்திரத்திலிடமில்லை. சாஸ்திரத்திலிதைச் செய்யலாம், இதைச் செய்யக்கூடாதென விளக்கமாகக் கூறும்பொழுது, யாகத்தைச் செய்யாதேஎன்றோ, நரமேதத்தைச் செய்என்றோ பகர்வது அறியாமையாகும். வேள்வியில் ஆடுகளைக் கொல்லுவது துன்பமன்றென சாத்திரம் கூறுநிற்க, 'ஆடுகள் நிரபராதிகள்' எனவும் 'வாயில்லா உயிர்கள்' எனவும் பரிந்து பேச முன்வருவதழகல்ல. 'ஆடுகள் சித்திரவதை செய்யப்படுகின்றன' என்றிவர் கூறுவது யாக மெங்ஙன மியற்றப்படுகின்றதென்பதை அறியாததாலோ, அன்றிச் சித்திரவதை என்ற சொற்பொருளறியாததாலோ தெரியவில்லை. ஆயிரக் கணக்கில் பணத்தைச் செலவு செய்து பட்டினி கிடந்து பல நியதிகளுடன் யாகம் செய்வது நமது வேதங்கள்பாலுள்ள பெரு நம்பிக்கையையும், அதனால் உண்டாகும் நமது மதத்தின் சிறப்பையும் விளக்கா நிற்க, நாம் பெருமையடைய வேண்டியது தகுதி. சில ஆடுகளைக் கொல்லவேண்டும் என்ற விருப்பமிருந்தால் அதற்கு வேட்டலொன்றே துறையல்ல. 'மாமிசம் தின்னவேண்டும் என்ற மோகமே யாகம் செய்யத் தூண்டுகின்றது' என்ற முடிவிற்கு வந்த இவரது அறிவு பாராட்டுதற்குரியதே! ஆயிரக் கணக்கில் செலவு செய்து எவ்வளவு மாமிசம் தின்ன அந்தணர்கள் விரும்புவது பெரிய தவறன்றோ. இக்காலத்தில், சமூஹ பஹிஷ்காரம் என்பது சிறிதுமில்லை. தன்னிஷ்டப்படி

எவரும் நடக்கலாம். எனவே, ஆயிரக் கணக்கில் செலவு செய்து மாமிச மோகத்தை நிவர்த்தி சேய்ய அவசியமில்லை. பல வேறு வழிகளுள.

"எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அந்தணர்கள் ஆடுகளைக் கொல்லுவது எங்ஙனமொக்கும்" என்ற வினவிற்குக் காளிதாஸர் சாகுந்தலத்தில்

ஸஹஜம் கில யத்விநிந்திதம் கலு தத்கர்ம விவர்ஜநீயம்
பஸுமாரண கர்மதாருணோ நுகம்பா ம்ருதுரேவ ச்ரோத்ரிய:

என்று சமாதானம் கூறியுள்ளார். இது செம்படவன் வாயிலாகக் கூறப்படுவதாக வமைத்த காளிதாசருடைய அறிவின் கூர்மை வியக்கத்தக்கதே. இங்ஙனமே மாபாரதத்து தர்மவியாதன் கௌசிகனுக்கு தர்மோபதேசம் செய்வது அமைக்கப்பட்டுள்ளது.

யக்ஞேசு பஸவோப்ரம்ஹந் வத்யந்தே த்விஜஸத்தமை:
ஸம்ஸ்க்ருதா: கில மந்த்ரே ஸ்துதேபி ஸ்வர்கமவாப்நுவந்

இத்தகைய அசட்டுக் கேள்விகளுக்குச் செம்படவன் தர்மவியாதன் போன்றோரே விடையளிக்கத் தக்கவர்கள் என்பது அன்னார் கருத்து. வலைபனுக்குத் தெரிந்தது கூட சித்தூர் பண்டிதருக்குத் தெரியாதது தான்வியப்பு

தயாநந்த சரஸ்வதிக்கு இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்பே,

யதுதும்பரவர்ணாநாம் கடிநாம் மண்டலம் மஹத்
பீதம் ந கமயேத்ஸ்வர்கம் கிம் தத்ரகதுகதம் நயேத்

என்பன போன்ற கேள்விகளையே தயாநந்தர் திருப்பிக் கேட்டிருக்கிறாரேயன்றி தன் யுக்தி சாதுர்யத்தால் ஒன்றும் கேட்டுவிடவில்லை. அவைகளுக்கும் பல்லாயிர சமாதானங்கள் கூறப்பட்டுள்ளன. எனவே, நாமிங்கு சமாதானம் கூற அவசியமில்லை. "காக்கையின் கண்ணுக்குப் பீர்க்கங்காய் அகப்பட்டதாம்" என்பதுபோல இந்தப் பண்டிதர் கண்ணில் தயாநந்தருடைய புத்தகந்தா னகப்பட்டது போலும்! • வடமொழி யறிஞர்களிடம் சார்பாக மதஸ்வரூபம் இன்னதென இவர் கேட்டறிக.

மாமிசம் தின்பாரை யுத்தேசித்து அநுதினமும் பல்லாயிரக் கணக்கான ஜீவன்கள் வதைக்கப்படுவது கண்கூடு. அதை குறைக்கச் சிறிது முயன்றாலும் புண்யமுண்டு. நற்காரியத்தைத் தடுப்பதும், தீய காரியத்தை யநுமதிப்பதும் பாபத்திற்கிடமாகும். ஒவ்வொரு நாளும் எவ்விடத்தும் வேள்வி யியற்றப்படினும் நமக்கு அது நன்மையேயன்றி வேறில்லை. அங்ஙனமிருக்கச் சில யாகங்களே நடத்தப்பட அவைகளை இவர் தடுக்க வன்மையற்றவராயினும், அதைத் தடுக்க முயன்று பாபத்திற்காளாக வேண்டியதில்லை. வேதத்தில் நம்பிக்கையுடைய பார்ப்பனரே வேள்வி யியற்ற முன்வருவர். அவர்கள் சித்தூர் பண்டிதர் 'இந்து மதத்தில் யாகத்திற்கிடமில்லை' என்ற முடிவிற்கு வந்ததனால் மாத்திரம் யாகத்தை நிறுத்தப்போவதில்லை.

நிந்தந்து நீதிநிபுணா யதி வா ஸ்துவந்து
லக்ஷ்மீ: ஸமாவிசது கச்சது வா யதேஷ்டம்

அத்யைவவா மரணமஸ்து யுகாந்தரே வா
ந்யாய்யாத்பத: ப்ரவிச்சலந்தி பதம் ந தீரா:

"யாகம் செய்வது மாமிச மோகத்தினால்" என்று கண்ட இவரது மூளைத்திறமையைக் கண்டு வியந்து இனி பகிரங்கமாக மாமிசம் சாப்பிட முன்வரவும் போவதில்லை. "எப்படித் தின்றாலும் மாமிசம் மாமிசந்தானாகும்! பாஷாணத்தை சுத்தி செய்து சாப்பிட்டாலும் அது கொல்லும். அது பாஷாணமே யன்றோ" என்று கூறும் கூற்றுக்கு நிகரான இவர்தம் கூற்றை யார்தான் மெச்சுவார்! ஆகமம், அநுமானம், காக்ஷி என்ற அளவுகளில் காணமுடியாத தத்துவத்தைக்கண்டு வடித்து வெளியிட்ட பண்டிதர்தம் சீர்மையை மெச்சுகின்றோம். இந்து மதத்தின் உயரிய கொள்கைகளை இன்னதென்று முற்றுமறிந்த ஆனந்தபோதினி பத்திராதிபரும் யாகம் செய்வதை மறுத்துக்கூற முன்வந்தது வருந்தத்தக்கதே!

---

## ஸ்ரீ சிங்கேரி ஜகத்குரு ஸ்வாமிகளின் ஸ்ரீமுகம்.

தேவகேட்டையில் வஸிக்கும் சுப்பிரமணிய அய்யர் முதலிய வர்கள் விஷயத்தில் நாராயண ஸ்மரண பூர்வகமான ஆசீர்வாதங்கள் வளரட்டும்.

இப்பவும் உங்களுடைய விக்ஞாபனப் பத்திரிகையில் சில ஆஸ்திகர்களுக்கும் கலியுகத்தில் யாகம் செய்யலாமா செய்யக் கூடாதா என்னும் ஸந்தேகமிருக்கிற விஷயத்தைக் கேட்டு இதுவும் கலிகாலத்தின் மஹிமையென்று மிக ஆச்சர்யமடைகிறோம். சிஷ்டர் களால் ஆதரிக்கப்பட்டும் சாஸ்திரங்களால் மட்டும் அறியத்தகுந்த யக்ஞம் முதலிய பரிசுத்த தர்மங்களைக் கெடுக்கக்கூடிய நாஸ்திகர்க ளின் வார்த்தைகளால் ஷட்கர்ம நிரதர்களான ஆஸ்திகருடைய மனதிலும் ஸந்தேகம் உதிக்குமானல் ஸ்வர்க்கம் மோக்ஷங்களான பலனையளிக்கும் வேதம் என்ன கதியை அடையும்? இது சுருக்கம். இதன் விரிவான "க்ரது கர்த்தவ்யதா நிர்ணயம்" என்னும் சுருக்க மான கிரந்தமும் வெளிவரப்போகிறது. ஆகையால் "பிராம்மணன் எவ்வித முயற்சி செய்தும் விசேஷமாய் அக்னியை ஆதானம் செய்து சுத்தமான மனதுடன் பரமேஸ்வரனை பஜிக்கவேண்டும்." "சராசர ப்ரபஞ்சத்தில் வேதத்தால் விதிக்கப்பட்ட ஹிம்ஸையானது மாறுதலையடையாதது. அந்த கர்மத்தை வேதமே சொல்லியபடி யால் அந்த ஹிம்ஸையை அஹிம்ஸையாக அறியத்தகுந்தது" என்றும் ச்ருதி ஸ்மிருதிகளை மனதில் நிச்சயித்துக்கொண்டு வைதிக மான ஸநாதந தர்மத்தைக் கெடுக்கக்கூடியவர்களின் வார்த்தை களில் காது கொடுக்காமல் மீமாம்ஸா நியாயங்களால் நிச்சயம் செய்யப்பட்ட பொருளையுடைய ச்ருதி ஸ்மிருதிகளால் நிச்சயிக்கப் பட்டுள்ளதும் பாராசர ஸ்மிருதியில் கலிவர்ஜ்யப் பிரகாணத்தில் கலியில் கூடாதென்று நிஷேதிக்கப்படாததும் மங்களத்தை அளிக் கக் கூடியதுமான யாகங்களை அனுஷ்டிக்கும் பிரதிக்ஞாஹ நிஷ்டர்க ளான பிராம்மணர்களுக்கு ஒரு தோஷமும் இல்லை. யாகம் செய்யாத விஷயத்தில் குற்றம் கூறப்பட்டிருக்கிறது. மாதவீயம்:- "நாஸ்திக்யத்தாலோ அல்லது சோம்பலினலோ அக்னிகளை ஆதானம் செய்ய ஆசைப்படாமலும் யாகம் செய்யாமலும் இருக்கும் பிராம்ம ணன் அநேகம் நாகங்களை அனுபவிக்கிறான்" இவை முதலியன. ஆகையால், தன் தர்மத்தை விடாமல் அனுஷ்டிக்கும் கிரஹஸ்தர்க ளான பிராம்மணர்களால் ஸந்தேகப்படாமலும் உத்ஸாகத்தோடும் பக்தியோடும் சிரத்தையோடும் யாகங்கள் செய்யப்பட வேண்டும் என்று ஆசிர்வதிக்கிறோம்.

## பூரி, ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமிகளின் ஸ்ரீமுகம்.

---

ரோட்பூர்.

தேவகோட்டை, வக்கில்

எஸ் சுப்பிரமணிய அய்யர் அவர்களுக்கு.

ஸ்ரீ ஜகத்குரு பூரி சங்காராசார்ய ஸ்வாமி மகாராஜ் அவர்கள் நாராயண ஸ்மரணம்.

தேவகோட்டையில் நடக்கப்போகும் மஹா வாஜபேயம், கருட சயனம், அக்னிஷ்டோமாதி யக்ஞங்கள் சாஸ்திரோக்தமாக நன்ருய் நடந்து முடிவுபெற வேண்டுமென்றும், ஷை யாகங்கள் செய்கிறவர்களும் அதற்கு உதவி செய்கிறவர்களும் அது சம்மந்தப் பட்ட மற்ற எல்லோர்களும் பரிபூர்ணமான ஸந்தோஷமடைய வேண்டுமென்றும் விசேஷமாக அநுக்ரஹிக்கிருர்கள்.

காரியதரிசி